# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ 10/-
அரையாண்டு சந்தா ரூ 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
V. தமிழ்ராசன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 1 | 1-7-82 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை | இதழ் 4, 5


## 1980-81 ஆண்டு சிறந்த இசையமைப்பாளர்

# இளையராஜாவுக்கு தமிழக அரசு பரிசு

இளையராசா தமிழ் திரை இசை உலகில் பல புதுமைகளை புரட்சிகளை செய்தவர். மதுரை மாவட்டத்தில் சிறு கிராமத்தில் எளிய பின் தங்கிய குடியில் பிறந்தவர். முதல் படம் 'அன்னக்கிளி' மூலமே இசை உலகில் முதன்மை இசை இயக்குநர்கள் இடத்திற்கு வந்தவர் திரை உலகில் போட்டியின்றி கொடி கட்டிக் கொண்டிருந்த இசை அமைப்பாளரை கலங்க வைத்தவர். திரைப்பட வெளியீட்டாளர்கள் படம்பார்க்க வரும் பொழுது நடிகர்களைக்கூட முதலில் கேட்காது இசையமைப்பாளர் யார் என கேட்க வைத்தவர். கிராமபுற மெட்டுகளை நகர்புறம் நாட வைத்தவர். குறுகிய காலத்தில் ஏராளமான திரைப் படங்களுக்கு இசையமைத்தவர். தமிழ்படத்திற்கு முதன் முதலில் ஸ்டீரியோ (ஒலியொலி) இசைத்தட்டுகள் வெளியிட்டார். படம் பிரியா

இசைக்கட்டு உலகில் தனி ஆட்சி MONOPOLY செய்து கொண்டிருந்த நிறுவனத்தை எதிர்த்து வேறு நிறுவனத்தை வளர்த்து விட்டவர். இன்று தானே எக்கோ ECHO என்ற இசைத்தட்டு நிறுவனத்தை வைத்து நடத்தி வருகின்றார்.

மலேசியா வாசுதேவன், தீபன் சக்ரவர்த்தி, S P சைலஜா போன்ற புது பாடகர்கள், கவிஞர் வைரமுத்து, கங்கை அமரன் போன்ற புது கவிஞர்களுக்கு நல்ல அறிமுகம் வழங்கி வளர்த்துவிட்டவர், பல கருவிகளும் தானே இயக்கத் தெரிந்தவர், அடிப்படை இசையிலும் தேர்ச்சியுடையவர். நாதசுர கருவிமீது மதிப்பு உடையவர். இதனை அவரே ஒரு திருமண விழாவில் தெரிவித்தார்.

இன்று திரை இசையமைப்பாளர்களில் முதலிடத்தில் நிற்பவர் அவரே! இது தமிழ் திரையுலகம் அறிந்தது. இவருக்கு சென்றாண்டு சிறந்த இசையமைப்பாளர் என தமிழக அரசு பரிசு வழங்க அறிவித்துள்ளனர், இவருடன் சிறந்த திரைப்பட பாடகர்களாக S. P. பாலு, P சுசீலா, இவர்களும் பாடலாசிரியராக புலமைபித்தனும் பரிசுகள் பெற உள்ளனர். விரைவில் தமிழக முதல்வர் எம். ஜி. ஆர் தலைமையில் பரிசளிப்பு விழா நடைபெற உள்ளது

அனைவருக்கும் எங்கள் வாழ்த்துகள் !

## திரைப்படபாடகர் S. P. பலசுப்பிரமணியத்திற்கு விருதுகள்

இந்தியக் குடியரசுத் தலைவரின் சிறந்த பாடகர் பரிசினை சென்றாண்டு 'சங்கராபரணம்' என்ற தெலுங்கு படத்தில் பாடி S P பாலசுப்ரமணியம் பரிசு பெற்றார் மீண்டும் 'ஏக் துஜே கேலியே' என்ற இந்திப் படத்தில் பாடி இவ்வாண்டு குடியரசுத் தலைவர் பரிசுப் பெற்றுள்ளார் இதற்கு AVM இசைத் தட்டு நிறுவனமும் கலாசாகர் என்ற கலை மன்றமும் சேர்ந்து சென்னை கலைவாணர் அரங்கில் பாராட்டுவிழா நடத்தின AVM குமரன்பாலுவுக்கு பொன்னாடை போர்த்தினார் 'சினி ஒம் ஏ வல்டு' என்ற ஆங்கில திரைப் பத்திரிக்கையும் இவ்வாண்டு சிறந்த பாடகர் என திரு S P. பலு அவர்களையும், பாடகி என பிரபல இந்துஸ்தானி இசையரசி பர்வீன் சுல்தானாவை (படம் கூலாத) தேர்ந்தெடுத்துள்ளனர். இதன் பாராட்டு விழாவில் ஆந்திர முதல்வர் திரு வெங்கட்ராவ் கர்நாடக முதல்வர் திரு குண்டுராவ் இவர்கள் கலந்து கலைஞர்களைப் பாராட்டினர்.

## 'காற்றுக்கென்ன வேலி' கண்ட புது இசை இயக்குநர்

மோகன ராதா இவர்கள் நடித்து வெளிவந்துள்ள SPT பிலிம்சு 'காற்றுக்கென்னவேலி' படம் காற்றுபாக்கில் சென்று பார்க்கும் படமாகவே உள்ளது ஆனால் அதன் பாடல்கள், காற்றில் கலந்து வரும் கீதமாக ஒலிக்கின்றது. பாடல்களுக்கே படம் ஓடுகின்றது என்றும் கூட துணியாகச்சொல்லலாம். இத்தனைக்கும் புது இளம் இசை இயக்குநர் சிவாஜி ராஜா இசையமைத்துள்ளார்.

இவரை இயலிசை ஆசிரியர் பேட்டி கண்டபோது தான் 3 தெலுங்கு படங்கள் இசையமைத்துள்ளதாகவும், பிரபல தமிழ் நடிகர்கள விஜய்காந்த். மோகன, ரஜனி இவர்கள் நடிக்கும் பலதமிழ்ப் படங்களுக்கும் இசையமைப்பதாகவும் தெரிவித்தார். தனது அறிமுகத்திற்கும் வளர்ச்சிக்கும் SPT பிலிம்சு, திரு பஞ்சு அருணாசலம் K N சுப்பு இவர்களே காரணம் எனவும், அவர்களுக்குதான என்றும் நன்றியுடையவன் என்றும் தெரிவித்தார். அவருக்கும் அவருக்கு வாய்ப்பு வழங்கிய SPT பிலிம்சுக்கும் எங்கள் வாழ்த்துகள்!

## தமிழ் இசைதட்டுகளுக்கு வெளிநாட்டிலும் கிராக்கி

இசைச்சுட்டிகள் நிறைய வர ஆரம்பித்தாலும் இசைத்தட்டுகளுக்கு மதிப்பு குறையவில்லை. அவைகளும் விற்கின்றன. காரணம் இசைத்தட்டிலிருந்து இசைச்சுட்டியில் பதிவு செய்து கொடுக்கும் கடைகள் பெருகிவிட்டன. தவிர ஒலி பெருக்கியாளர்கள் இசைத் தட்டையே அதிகம் விரும்புகின்றனர். வெளிநாடுகளில் இந்திய தமிழ் திரைபபட, இசைத்தட்டுகளுக்கு நல்ல வரவேற்பு குறிப்பாக தமிழ் பக்தி பாடல்கள் இசைத்தட்டுகள் அதிகம் விற்பனையாகின்றன இலங்கை சிங்கப்பூர் மலேசியா, பிஜி இந்தோனேஷியா, இங்கிலாந்து அமெரிக்கா முதலிய நாடுகள் விரும்பி வாங்குகின்றன. இது பற்றி வெளிநாட்டு தமிழர் ஒருவரை இயலிசை பேட்டி கண்டபோது அவர் கீழ்க்கண்ட கருத்துகளை தெரிவித்தார். இதனை தமிழகத்தில் உள்ள இசைத் தட்டு நிறுவனங்கள் தகவலுக்காக கீழே கொடுத்துள்ளோம்.

நல்ல குரல் உள்ள புது பாடகர்களைகொண்டு நல்ல இசை அமைப்பாளர்களையும் வைத்து மேலும் சிரமம் எடுத்து சிறப்பாக இசைத் தட்டுகள் தயாரித்தல் வெளிநாடுகளில் அதிகம் விற்கும்.

## திருவாரூர் கமலாயம் தெப்பத்திருவிழா

### கலைநிகழ்ச்சிகள் நடந்தன

திருவாரூர் அருள்மிகு தியாகராச சுவாமி திருக்கோயில் குளம் கமலாலயம் பெரியது. இதன் தெய்வத்திருவிழா தமிழகத்தில் மிகவும் பிரபலமானது. பெரும் தெப்பம் கட்டி அதிலேயே கலை நிகழ்ச்சிகள் நடத்துவார்கள். இவ்வருடம் ஜூன் 4, 5, 6 தேதிகளில் சிறப்பாக இவ்விழா நடைபெற்றது. ஷேக் சின்ன மௌலானா, கோட்டூர் சகோதரர்கள் இவர்கள் நாதசுர கச்சேரியும். AKC நடராஜன் கிளாரினெட் இசையும் சீதா சுப்ரமணியம், DK ஜெயராமன் பாட்டு கச்சேரியும், நீலா குருசுமணி புல்லாங்குழல் கச்சேரியும் நடைபெற்றன. ஏராள ரசிகர்கள் வந்து கலந்து கொண்டனர்.

## மதுரை இசைக்கல்லூரி புதிய முதல்வர்

சென்னை இசைக்கல்லூரியில இசைப்பேராசிரியராக பல ஆண்டுகளாக பணியாற்றியவர் திருப்பாம்புரம் S. சண்முக சுந்தரம். இவர் காலஞ்சென்ற இசைமேதைகள் புல்லாங்குழல் திருப்பாம்புரம் சுவாமிநாதன், திருப்பாம்புரம் சிவசுப்பிரமணிய பிள்ளை ஆகியோர் குடும்பத்தைச்சேர்ந்தவர்., கலவியறிவு கலையறிவு, ஒழுக்கம், நல்ல பண்புடையவர். நிறைய கச்சேரிகளும் செய்துள்ளார். ஏராள மாணவர்கள் இவருக்கு உள்ளனர். இவரை மதுரை இசைக்கல்லூரி முதல்வராக தமிழக அரசு நியமித்து உள்ளது அவருக்கும் அரசுக்கும் எங்கள் வாழ்த்துக்கள்!

## ரசிகர்கள் ரசனை

தங்களின் இயலிசை பத்திரிகை எனது தந்தையார் திரு டி, எ. சம்மந்தமூர்த்தி ஆச்சாரி அவர்கள் மாணவர் டி கே எஸ் கலைவாணன் வீட்டில் பார்த்து படித்து மகிழ்ந்தேன். இசையைக் குறிக்கோளாக வைத்து இப்படி ஒரு பத்திரிக்கை வெளிவருவது உண்மையிலேயே பாராட்டத்தக்கது. வாழ்க வளர்க தங்கள் இயலிசை.

டி எ எஸ் தக்கேசி கொரட்டூர்

தங்கள் நடத்தி வரும் இயலிசை பத்திரிகை சங்கீதவித்வான்களுக்கு ஒரு நல்ல பத்திரிகை எனது வாழ்த்துகள்.

N. G. முருகையன்,
மிருதங்கம்.டோலக் வித்வான்
நாகப்பட்டினம்

இயலிசையில் இறைவன்
இசைப்பவர் நெஞ்சில் உறைவன்
எதைக் கேட்டாலும் தருவன்
ஏழிசைக்கும் தலைவன்

R. இராமகிருஷ்ணன்
இந்திய ரிசர்வ் வங்கி
திருவனந்தபுரம்

இயலிசை பத்திரிகை கிடைக்கப் பெற்றது. மிக்க நன்றி ஆகஸ்டு மாதம் நமது ஆலயத்தில் விநாயக சதுர்த்தி விழா நடக்கிறபடியால் தங்களுக்கு தெரிந்த கதா காலட்சேபம் வில்லுப்பாட்டு இன்னிசை நிகழ்ச்சிகள் நடத்துபவர்களை நமது கோயிலுக்கு தெரியப்படுத்தவும். உங்கள் பத்திரிகையிலும் விநாயக சதுர்த்தி விழா விபரம் பிரசுரிக்கவும்

K. V. கனகசபை
உதவிசெயலாளர்
ஸ்ரீ நவசக்தி விநாயகர் ஆலயம்
மயிலை, சென்னை- 4





## ஒருதலை பலராகம்

'ஒருதலைராகம்' படம் தமிழ்த்திரையுலகில் பெரும் புரட்சியை செய்தது. அந்த ராகத்தை எழுப்பியது யார் என்பது சில நாட்களுக்கு பிரச்சனையாக இருந்தது. திரையுலகில் இருந்தவர்களுககு 'ஒருதலைராகம்' குழுவில்- யூனிட்டில் பலர் இருந்தாலும் அதன் வெற்றிக்கு பொறுப்பான ஒருதலை திரு T. இராஜேந்தரே என தெரிந்தது. வாய்ப்புகள் வழங்கினர். அவரும் தானே அந்த ஒருதலை என 'ரயில்பயணங்களில்' நிருபித்தார்.

திரையுலகில் கதை வசனம் டைரக்ஷன் இசை இத்தனை பொறுப்புகளையும் ஒருவரே ஏற்று வெற்றி பெறுவது என்பது புதுமை மட்டுமல்ல சிரமமும் கூட. முன்னர் இதை ரலைச் செய்தவர் S.பாலச்சந்தர் அவரது வெற்றிப் படங்களான பொம்மை; நடு இரவில் இவைகளுக்கு அவரே மேற்கண்ட பொறுப்புகளை ஏற்ருர். திரு T. இராஜேந்தர் அவரையும் விடஒருபடி மேலே சென்று அழகிய கவிதைகளையும் எழுதி கதை. வசனம், டைரக்சன், பாடல். இசை அனைத்தும் ஒருதலையாக இருந்து பலராகங்கள் எழுப்பி சிறப்பாக செய்கின்ருர்



அவரது 'நெஞ்சில் ஒரு ராகம்' ரசிகர்கள் நெஞ்சினும் ஒரு ராகம்தான். கதையமைப்பும் இசையமைப்பும் ஒன்றை ஒன்று போட்டியிடுகின்றது.

சமீபத்தில் நமது சிறப்பாசிரியர் இவரைக்கண்டபோது 'இயலிசை' இதழுக்கு தனது வாழ்த்துக்களைத் தெரிவித்தார் இசைக்கலைக்கென்றே தனி இதழ் வருவதனைக்கண்டு மகிழ்ச்சியடைகின்றேன் என்ருர் அவரிடத்தில் தஞ்சைத்தரணிக்கே உரிய தனி கலையம்சம்!

3- ம் பக்கம் தொடர்ச்சி:

இது இவ்வாறிருக்க ச, ரி, க, ம ப த, நி என்ற தனித்தமிழ்ச் சொல்லாகிய ஏழு சுரங்களும் தமிழ் மொழியே என்பதற்கு சான்று உண்டு. சிலப்பதிகார 'ஆச்சியர் குரவை'யில் கண்ணகி அடைக்கலமிருந்த ஆய்ச்சியர் வீட்டில் சில துர்நிமித்தங்கள் காண அதனால் எகேடும் வராமலிருக்க நாரணனைக் கொண்டாடி 'இரவைக் கூத்து' என்னும் ஓர் கூத்தை மாதிரி என்னும் யாதவ மங்கை ஆட வழி செய்தாள். நிலமட்டத்தில் மேற்கு முகமாய் நின்று பெருவட்டம் சிறினல். அதில் பன்னிரண்டு கோணமிட்டுத் தாமும் தன் மகள் ஐயை என்பவள் உள்பட ஏழு பெண்களை அழைத்து அவர்களுக்கு முறையே ச, ரி, க, ம, ப, த, நி, என்று பெயர் புனைந்து கொண்டனர் அவர்கள் அப்பன்னிரண்ற கோணத்தில் நின்று மூடை வைத்துப் பாங்குற ஆடுவதற்கு கண்ணன் பிள்ளையோடிய கூத்து எனன்றனர். கதைக்குப் பொருந்த வ என்னும் இடத்தில் நிற்பவளுக்கு பலராமன் என்றம் ரி, நி என்ற இடத்தில் நிற்பவளை மாயவனுக்குப் பாரியாகவும் ம, த என்ற இடத்தில் நிற்பவளைப் பலராமனுக்குப் பாரியாகவும் க என்ற இடத்தில் நின்ற மாதரி என்ற மாது அத்தையாகிய ம என்ற சுரத்திற்கும் ரி என்ற சுரத்திற்கும் நடுவில் நின்று முறைப்படி ஆடியும் நாரணனைக் கொண்டாடினர். இதன் மூலம் ஏழு சுரங்கள் தமிழுக்கே உரியன என்பது தெளிவாய் விளங்குகின்றது.

இந்த எழுவகை ஒலிகளையுங்கொண்டு பண்களும் திறமும் என்று பகுதிகளாக இயக்கும் வகைகளில் பல்லாயிர இசை வகைகளைக் கண்டும், பெரும் பண் நான்கும் அகநிலை, புறநிலை அருகியல், பெருகியல் என்னும் வேறுபாட்டினுல்பதினுறு ஆகவும் திறம், திறம்வகைப்பண் எண்பத்து நாலாகவும், தாரப்பண் திறம். பையுள், காஞ்சி படுமலை என மூன்றும் சேர்ந்து நூற்றி மூன்று பண்களையும் மூலாதாரம் தொடங்கிய மூச்சைக் காலால் கிளப்பி கருத்தால் இயக்கி ஒன்றெனத்தாக்கி இரண்டெனப் படுத்துப் பண்ணீர்மைகளைப் பிறப்பிக்கப்பெற்ற படலியலுக்கமைந்த மிடற்றுப்பாடலைப்பாட வேண்டும் என்று முன்னோர்கள் விளக்குகின்ருர்கள். இசையோடு இயைந்து செல்லும் கருத்தின் இயக்கம் இதில்நினைவாய் எடுத்துக்காட்டப்படுகிறது. முதலில் எழுந்த ஆதாரவோசை, பின் இசையும் பண்ணும் என்று இரண்டுவகையாக இசைக்கப்படுவதனுல், மேலே 'இரண்டெனப் பகுத்து' என்று வருகின்றது. கருத்துக்கள் பொருத்தமாக இயங்குவதற்கு இசையை இன்னின்ன காலத்திற்கு, இன்னின்ன இசையோடு பொருத்தமானது என்று கண்டு பண்டையக் கோயில்கள், மடங்கள் முதலியவைகளில் வழிவழியாக இசைவாணர்களை கொண்டு தமிழிசை இசைக்கப்பெற்று வருகின்றது.

## இசைப்பணி எங்கள் கடன்

இசைச் சபைகள், கோவில் திருவிழாக்கள், திருமண வரவேற்பு இவற்றில் கலை நிகழ்ச்சிகள் 'இயலிசை' மூலம் ஏற்பாடு செய்யலாம்.

அருணகிரிநாதர் இசைவிழா, திருமுறை இசைவிழா' தியாகராசர் ஆராதனை விழா போன்ற இசைவிழாக்களை ஏற்பாடு செய்யவும் சிறப்புடன் நடத்தவும் இயலிசை உதவி பெறலாம்.

சிறு இசைச் சபைகள் (chamber music) இயலிசையை பயன்படுத்திக் கொள்ளலாம்.

தனியார் இசை நடன பள்ளிகள் இயலிசை மூலம் வளரலாம்.

(விபரங்களுக்கு 'இயலிசையை' தொடர்பு கொள்ளுங்கள்)

# தமிழிசை மாண்பு

தி. ச. சுந்தர ஓதுவா மூர்த்திகள்



தமிழர்கள் தமிழ் மொழியை வளர்க்க முதல், இடை, கடை என மூன்று தமிழ்ச் சங்கங்களை நிறுவி இருந்தனர். அக்காலத்தில் நந்தமிழர்கள் மொழி, தொழில் முதலியவைகளில் நிறைந்த பேரறிவுடையவர்களாக இருந்தார்கள் என்று பண்டையத் தமிழ் நூல்கள் உணர்த்துகின்றன.

தமிழ் இயல், இசை, நாடகம் என மூன்று வகைப்படும். இசைக்காகத் தனியாக எண்ணற்ற இலக்கண நூல்களும் இலக்கிய நூல்களும் இருந்தன. இந் நூல்களைப் பண்டைக்காலத்தில் தமிழ் மக்கள் சிறப்பாக ஆராய்ந்து பயின்று மேன்மையடைந்து வந்திருக்கிறார்கள் அக்காலத்தில் இசை வளர்ச்சிக்காகத் தமிழ்ச் சங்கங்களில் தனித் தனியே இடங்கள் இருந்தன. இசை வளர்க்க அமைத்த மண்டபங்களை 'இசைச்சூழல்' என்று சொல்லுவார்கள் சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய மணிவாசகப் பெருமான் அருளிச் செய்த திருக்கோவையாரில், ''கூடலில் ஆய்ந்த ஒண் தீம் தமிழின் எழிலை குழல் பகர்கோ'' எனத் திருவாய் மலர்ந்திருக்கின்றார் இதுபோல் நாடக ஆராய்ச்சிக்கும் தனியான மண்டபங்கள் இருந்தன. பண்டையத் தமிழர் தொட்டிலில் இருந்து சுடுகாடு செல்லும்வரை இசை இன்பத்தை நுகர்ந்து வாழ்க்கையில் ஊக்கமும் ஆக்கமும் பெற்று, பொன்றும் இன்பந் துய்க்க நல்வாழ்வு நடத்தி வந்தனர்.

குழந்தைப் பருவத்தில் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுகையில் ஊசல்வரி என்னும் பாட்டாலும், விளையாட்டுப் பருவத்தில் கந்துவரி என்னும் பாட்டாலும், பெரியவர்களானபின் மணம் போர் முதலியவற்றில் மங்கள வாழ்த்து. நலுங்குப்பாட்டு ஊஞ்சற்பாட்டு, செருப்பறைப் பாட்டு, பெண்கள் நெல் குத்து பொழுது வள்ளைப் பாட்டு என்னும் பாடல்களாலும் இசை இன்பக் கிளர்ச்சி கொண்டு மகிழ்ச்சியோடு ஆற்றுவரி, கானல் வரி முதலிய இசைப்பாட்டுகள் பாடிக் களி கொண்டிருந்தனர்.

பரிபாடல். பரிபாட்டு முதலிய நூல்களால் வைகையாற்றையும் திருப்பரங்குன்றத்துத் திருமாலிருஞ்சோலை மலையையும் வியந்து பாடி வந்ததோடு. புனல் விளையாட்டு, மலை விளையாட்டு என்பனவும் பாடி இருக்கிறார்கள் என்று அலாம்பரமாகிறது. தவிர, இயற்கைப் பொருள்களைப் பாடியதோடு முடிவாக எல்லாம் வல்ல இறைவனைப்பற்றியும் பண்ணோன்றவிசை பாடித் தமிழ் மக்கள் இன்புற்றனர் என்பதைப் பரிபாட்டுக்களில் விரிவாகக் காணலாம்.

பண்டைக்காலத் தமிழ்மக்கள் இயற்றமிழிலும், இசைத் தமிழே மேம்பாடுடைத்தென்றும். இயல், இசை என்னும் இரண்டினும் நாடகத் தமிழே இன்னும் மேம்பாட்டுடைத் தென்றும் மதித்துப் போற்றி வந்திருக்கின்றார்கள். இசையில், இயல், இசை என்னும் இரண்டும், நாடகத்தில் இயல், இசை, நாடகம் என மூன்றும் பொருந்தி இருத்தலின் நாடகத் தமிழ் மிகவும் மதிக்கப்படுவதாயிற்று.

ஆயினும் இயற்றமிழ்ச்செய்யுட்கள் பாடும் பொழுது இசையோடு கூட்டி இனிமையாகப்பாடுவது இயல்பு. ஆதலால் இயற்றமிழுக்கும்நாடகத்திற்கும் இசையே நடுவண்நின்று விளக்கே போல் ஆளத்திப்பண்ணை நின்று இன்பந்தருகின்ற தாகையால் இவ்விரண்டிற்கும் மேலானது இசையே.

''இசையுந் தோன்றும் இவற்றுள்ளே பண் பிறக்கும் என்றும்பாவோடணைதலில் இசையென்றார் பண்ணென்றார்'' என்னும் சிலப்பதிகார உரைமேற்கோள் நோக்கத்தக்கது.

மேலும், ''ஓசை ஒலியெல்லாமாணய் நீயே'' என்று அப்பர் அமுதவாக்கால் இசை, பண் என்னும் ஒலிவகைகள் இரண்டும் ஓசையிலும் ஒலியிலும் அடங்கும். ஒலிநுட்பம், ஒலியுருவம் என்னும் ஒலிவகைகளே அவை,

காரிய இயக்கத்திற்கு இவ்விரண்டின் நுட்ப திட்பங்களை அறிந்து இணைத்துப் பயன்படுத்துதல் இன்றியமையாதது ஆகும். இசைகலையில் இவ்விரண்டும் பொதுப் பிரிவுகள். இவை ஒவ்வொன்றிலும் வகைகளும் இயக்கங்களும் பலவாயிருக்கின்றன. அவைகளில் இரண்டொன்றை இங்கே குறிப்பாகச் சொல்லுகின்றேன். இசையானது பாவோடு அணையாத நிலையில் 'தென்னதென' வென்று ஆளத்தி [ஆலாபனம்]செய்யப்படுகிறது. பாவோடு அணைந்த நிலையில் அப் பாவின் எழுத்தோசைகளோடு இசைந்து ஆளத்தி செய்யப்படுகின்றது. பண்கள் பாடுகின்றபோது அப்பண்களின் இயல்புக்கேற்பத் தாளவுருபுகளோடு இடையிடையே ஆளத்தி நிகழும். அதனைப் பண் ஆளத்தியென்றுத் தனியாகப் பெயர் கூறுவர். இத்தகைய ஆளத்தி இசைகளுக்கு இடையிடையே பற்றுக் கோடாக நின்று உதவக்கூடிய எழுத்துகள் குற்றெழுத்துக்களில் அ, இ, உ எ, ஒ என்னும் ஐந்தும், நெட்டெழுத்துக்களில் ஆ, ஈ, ஊ ஏ, ஓ என்றஐந்தும் மெய்யெழுத்துகளில் ம, த, ந என்னும் மூன்றும் ஆகும். முதலில் ஓசையெழுத்துக்கு மகரம் நன்றாகவும் அதிலிருந்து எழும்ஓசை தூய்மையாகவும் ஆற்றலாகவும் முழு நலத்துடனும் விளங்கும். இங்ஙனம் மகரவொலியிலிருந்தும் இசைக்கூட்டி மேற்கூறிய குற்றெழுத்து நெட்டெழுத்துக்களால் அதனைவிரித்து நீட்டி எழுவகை இசை நிலைகளில் அமைந்து இயங்கச் செய்வது தான் ஆளத்தி இசையின் இயல்பாகும். இதனை ''மகரத்தின் ஒற்றுஞ் சுருதி விரவும் பகருள், குறில் நெடில் , பாரித்து நிகரில்லா தென்ன தெனவென்று பாடுவரோல் ஆளத்தி மன்றுவிச் சொல்லின்வகை குன்றாக் குறில் ஐந்தும் கோடா நெடில் ஐந்தும் நின்றூர்ந்த மந்நகரந் தவவொடு. நன்றாக நினைத்தால் ஏழு நிதானத்தால் நின்றியங்க என்றறி ஆளத்தியாம்'' என்று சிலப்பதிகார உரையில் வருகின்ற அடியார்க்கு நல்லார் மேற்கோள்களிலிருந்தும் அவர் உறைக்கும் விளக்கங்களிலிருந்தும் நன்றாகத் தெரிகின்றது.

குற்றெழுத்துக்களின் அடிப்படையிலிருந்து எழுகின்ற இசையியக்கம் காட்டு ஆளத்தி எனவும் அது தாளத்திற்கு ஏற்றபடி நிகழும் எனவும், நெட்டெழுத்துக்களின் அடிப்படையிலிருந்து எழுகின்ற இசையியக்கம் நிற ஆளத்தி எனவும் அது கூத்துக்கு ஏற்றபடி நிகழும் எனவும், அவ்விளக்கங்களில் அடியார்க்கு நல்லார் எடுத்துக் காட்டுகிறார். கருத்துகளை இசையினால் புறப்படச் செய்யும் போக்கு காட்டாளத்தி எனவும், பின்பு அக் கருத்துக்களின்படி வயமாக்கும் போக்கு நிறஆளத்தி எனவும் எடுத்துக்காட்டியிருக்கின்றனர்.

இவ்விசையானது பண்ணுருவங் கொள்ளும்போது, ஏழுசுரங்களோடு பாடுவது பண்எனவும் ஆறு சுரங்களோடு பாடுவது பண்ணியல் எனவும், ஐந்து சுரங்களில் பாடுவது பண்ணின் திறம் எனவும், நான்கு சுரங்களோடு பாடுவது பண்ணின் திறத்திறம் எனவும் வகுக்கப்படும்.

இவ்வொலி வகைகளுக்கு பண்டைத் தமிழ் நாட்டுப் பெரியோர் குரல், துத்தம், கைக்கிளை, உழை இளி, விளரி, தாரம் என்று விளங்கியதோடு நெஞ்சிலிருந்து ஒலி தோன்றுவதை மந்திரம் என்றும் கண்டத்திலிருந்து வருவதை மத்திமம் என்றும் சிரசிலிருந்துள்ளும் ஒலிகளைத் தாரம் என்றும் பெயரிட்டு வழங்கிவந்த வர் எழுவகை ஒலிகளையும் குறிப்பதற்குத் தமிழ்மொழியில் உள்ள எழுத்துக்களில் ஆ, ஈ, ஊ, ஏ, ஐ. ஓ, ஔ இவவேழு நெட்டெழுத்துகளையும் முனிவோர் பயன்படுத்தி வந்தனர். ச, ரி, க, ம, ப. த, நி, என்னும் ஏழில் ச, ப என்னும் சுரங்கள் சிவம் சக்திபோல் நின்றும் ரி, க, ம, த, நி என்னும் ஐந்து சுரங்களும் ஐம்புலன்கள் போல் சக்திவயமாய் நின்று சிவமாகிய ச என்னும் சுரத்தோடு சேர்தலை பண்டைய காப்பியங்களில் பரக்கக் காணலாம்

(2-ம் பக்கம் பார்க்க)

## தியாகராசர் இசை விழாவில் பாலமுரளி, ஜானகி பாட்டு

சென்னை நகரில் வசிக்கும் ஆந்திர மக்கள் நடத்தும் சென்னை மக்கள் குழு என்ற கலைமன்றம் தியாகராயநகரில் ஜீன் 12, 13 தேதிகளில் தியாகராசர் இசைவிழா நடத்தியது. இதில் பாடகர்கள் பாலமுரளிகிருஷ்ணு, ஜானகி, K. V. நாராயணசாமி கலந்து அவரது கீர்த்தனங்களை அழகாக பாடினர். T. N. கிருஷ்ணன் பிடில் கச்சேரி T. E. பழனிச்சாமி நாதசுரம், குமாரி மாளவிகா சருக்கை நடனம் இவைகளும் நடந்தன. விழாவுக்கு ஸ்ரீல-ஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் ஸ்ரீ-லஸ்ரீ காயத்ரிசுவாமிகள், முன்னாள் குடியரசுத் தலைவர் B. D. ஜட்டி, தொழில் அதிபர் S. V. நரசிம்மன், திருப்பதி ஆலய அதிகாரி P.V. R.K. பிரசாத் ஆகியோர் வந்து வாழ்த்துரை வழங்கினர்.

TN/MS (S) 260
'Iyallisai' musical Bi-Monthly. Edited & Published by M Lakshmi, 57, South Sivan Koil Street, Kodambakkam, Madras-24 and Printed by T. Thirunavukkarasu at Jayalakshmi Art Printers 20, Kavarai Street, Vadapalani, Madras-26



## மயிலை கபாலீசுவரர் திருக்கோயில் குடமுழுக்கு விழா கலை நிகழ்ச்சிகள்

சென்னை மயிலாப்பூர் அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோயில் குடமுழுக்கு விழா வரும் 8-7-82 காலை 8 மணியளவில் இந்து அறநிலைய ஆணையாளர் திரு V. சுப்பிரமணியம், அமைச்சர் திரு RM வீரப்பன் திருமுருக கிருபானந்தவாரியார், மயிலை குருஜி சுந்தரராமன், திருவேற்காடு அய்யப்ப சுவாமிகள் ஆகியோர் கலந்து கொள்கின்றனர். இவ்விழாவினை யொட்டி கீழ்க்கண்டவாறு கலை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| ஜூலை 2—7—82 | சங்கர்-கணேஷ் குழுவினர். மெல்லிசை |
| 3—7—82 | K. வீரமணி & ராதா |
| 4—7—82 | தஞ்சை (?) கல் செல்லமுத்து கிடார் கர்நாடக இசை |
| 5—7—82 | M. S. விசுவநாதன் குழுவினர் மெல்லிசை. |
| 6—7—82 | மதுரை சோமு குழுவினர் |
| 7—7—82 | சீர்காழி S. கோவிந்தராசன் குழுவினர். |
| 8—7—82 | குமாரி ஜெயந்தி இராசகோபால கலை நிகழ்ச்சி |

## விசாலம் வாசன் இல்லத்திருமணம்

சென்னை புரசவாக்கம் விசாலம் சீட்டு பண்டு மேலாளரும், 'இயலிசை' இதழ் ஆதரவாளருமான திரு N. K. வாசன் தங்கை செல்வி இந்திரா செல்வன் D. நித்தியானந்த சேகர் B. E இவர்கள் திருமணம் மே 27ந் தேதி காரைக்குடியில் நடைபெற்றது. மண விழாவிற்கு கலைமாமணிகள் வலையபட்டி சுப்ரமணியம் மன்னார்குடி இராசகோபால் இவர்கள் தவிலுடன் திருவிழா ஜெயசங்கர் நாதசுரம் வாசித்தார். வலையபட்டியின் வாசிப்பைக் கேட்க ஏராள ரசிகர்கள் வந்திருந்தனர். மணமக்களுக்கு இயலிசை வாழ்த்துக்கள்!

## கலை வளர்ச்சி நிதி உதவி தமிழக அரசு அறிவிப்பு

கலைஞர்கள், கலை நிறுவனங்கள், கலை படைப்புகள் ஆகியவற்றுக்கு மத்திய அரசு நிதி உதவி திட்டத்தின் கீழ் தமிழகத்தில் உள்ள நாடக, இசை, பொம்மலாட்டம் குழுவினருக்கு ஆண்டு தோறும் நிதி உதவி வழங்கப்படுகிறது.

அதேபோல் கலை அரங்கங்கள் கட்டவும், விரிவு படுத்தவும் ரூ 50 ஆயிரம் முதல் ரூ 1 லட்சத்து 50 ஆயிரம் வரை நிதி உதவி வழங்கப்படுகிறது.

அதன்படி இந்த ஆண்டுக்கான நிதி உதவி பெற விண்ணப்பம் செய்கிறவர்கள் மேற்கொண்டு விவரங்கள் பெற, செயலாளர் தமிழ் இயல், இசை நாடக மன்றம், கிரீன்வேஸ் சாலை சென்னை-28 என்ற முகவரியுடன் தொடர்பு கொள்ளலாம்.

இவ்வாறு தமிழக அரசு செய்தி மக்கள் தொடர்பு துறை அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## திருக்கழுக்குன்றத்தில் மாணிக்கவாசகர் மகத்திருமுறை விழா

சென்னையிலுள்ள சிவனடியார் திருக்கூட்டம் 36 ஆண்டுகளாக திருக்கழுக்குன்றத்தில் ஆனி திங்கள் மகத்தில் மாணிக்கவாசகர் திருமுறை இன்னிசை விழா நடத்தி வருகின்றது. இவ்வாண்டு வரும் ஜூன் 23 முதல் 26 வரை 37 வது ஆண்டுவிழா நடத்தி உள்ளனர். பலபிரபல இசை திருமுறை வாணர்கள் பாடி உள்ளனர். சமயத்தலைவர்கள் புலவர்கள் கலந்து கொண்டனர்.

## திருவையாறு தமிழிசை மன்ற செயலர் காட்டூர் T. இராசசேகரன் அவர்கள் மறைவு

கும்பகோணத்தில் ஆசிரியராகப் பணியாற்றி தமிழ் இசைத் தொண்டும் புரிந்தவர் காட்டூர் T. இராசசேகரன் M.A. இவர் சோமு அவர்களின் சீடர். பல இசைக் கச்சேரிகள் செய்தவர் கடந்த 10 ஆண்டுகளாக திருவையாற்றில் தமிழிசை மன்றம்—தமிழிசை விழா சிறப்பாக ஆண்டுதோறும் தை மாதத்தில் நடத்திவரும் விழாக்குழுவில் செயலாளராக பணியாற்றியவர் சென்ற ஆண்டு திருவையாற்றில் தியாகராச உற்சவமும், தமிழிசை விழாவும் ஒரே நேரத்தில் வந்து விட்டது. எனினும் தமிழிசை விழாவினைச் சிறப்பாக நடத்தியவர் அவர் சென்ற மாதம் திடீரென்று அகால மரணமடைந்தார் அவரது மறைவு தமிழிசை உலகுக்கு மாபெரும் இழப்பு அவரைப் பிரிந்து வாடும் அவரது குடும்பத்தாருக்கு இயலிசை சிறப்பாசிரியர் நேரில் சென்று ஆறுதல் சொன்னார்.

## பாடகர் S. P. பாலசுப்ரமணியம் அவர்கள் இசை இயக்குநராகின்றார்

K R G என்ற திரைப்பட நிறுவனம் சமீபத்தில் வெளிவந்து வெற்றி நடை போடும் 'நெஞ்சில் ஒரு இராகம்' உட்பட பல படங்களை தயாரித்தவர்கள். இவர்கள் ஸ்ரீதர் கதை வசனம் டைரக்ஷனில் புதுப்படம் ஒன்று தயாரிக்க உள்ளனர். கதாநாயகன் ரஜினிகாந்த். இதன் இசையமைப்பினை பாடகர் S P பாலு ஏற்றுள்ளார்.

## பெரம்பூர் சங்கீத சபையின் பெருமைமிகு இராச விழா

சென்னை நகரில் உள்ள முதன்மை சபைகளில் பெரம்பூர் சங்கீத சபையும் ஒன்று 1931-ல் நிறுவியது இதன் பொன் விழாவினையும், தியாகபிரம்ம உற்சவத்தையும் சேர்த்து கடந்த 3 மாதமாக கொண்டாடுகின்றனர் நாடகம், சினிமா, நிகழ்ச்சிகளையே பெரும்பாலும் சபைகள் ஏற்பாடு செய்து, இசைக் கச்சேரிகளை புறக்கணிக்கும் இக்காலத்தில் வெறும் இசை நிகழ்ச்சிகளை அதுவும் கர்நாடக இசைக் கச்சேரிகளை ஏற்பாடு செய்து இவர்கள் பொன் விழாவினைக் கொண்டாடுவது போற்றத்தக்கது. கடந்த ஏப்ரல் 82 மாதத்தில் நடந்த கச்சேரிகளில் திருமதி ரங்கநாயகி இராசகோபாலன் வீணை N. ரவி புல்லாங்குழல், திருமதி M.L.V. திருமதி பத்மா நாராயணசாமி, K. V. நாராயண சாமி Dr. T விசுவநாதன், புல்லாங்குழல் ஆகியோர் கச்சேரிகள் நடந்தன மே 82 மாதம் திருமதி சித்தார நாராயணன், R. S. இராமநாதன் மதுரை T N சேஷகோபாலன் திருச்சூர் V. இராமச் சந்திரன். T M தியாகராஜன் லால்குடி ஜெயராமன், பிடில், Dr D.K. ஜெயராமன் D. K. பட்டம்மாள், நேதனூரி கிருஷ்ணமூர்த்தி பம்பாய் சகோதரிகள் கச்சேரிகள் நடந்தன.

### ஜூன் 82-ம் மாதம்-நிகழ்ச்சிகள்

| | |
|---|---|
| 4—6—82 | திருமதி கலபகம்ராமன் |
| 5—6—82 | சுகுமார் பிரசாத்-கிடார் |
| 10—6—82 | திருமதி லலிதா சேஷாத்ரி |
| 11—6—82 | T. K. கோவிந்தராவ் |
| 12—6—82 | M. S கோபால கிருஷ்ணன் & நாமதா கோபாலகிருஷ்ணன் வயலின். |
| 14—6—82 | B ராஜம் அய்யர் |
| 17—6—82 | P. S. நாராயணசாமி |
| 18—6—82 | T. V. சங்கரநாராயணன் |
| 19—6—82 | மகாராசபுரம் சந்தானம் |
| 21—6—82 | மணி கிருஷ்ணசாமி |
| 23—6—82 | அலுப்பி வெங்கடேசன். |
| 24—6—82 | மதுரை S. சோமசுந்தரம். |
| 25—6—82 | லட்சுமி சங்கர் இந்துஸ்தானி |
| 26—6—82 | T. N. கிருஷ்ணன ஸ்ரீராம்— வயலின் |
| 28—6—82 | பவானி N. கிருஷ்ணன |
| 29—6—82 | ஸ்ரீ கிருஷ்ண இசைக்கல்லூரி மாணவர்கள் |
| 30—6—82 | வசளமியா மதனகோபால— இந்துஸ்தானி |

## இசை இயக்குநர் M. B. சீனுவாசனுக்கு தேசிய இசைக்குழுவில் இடம்

தேசிய உணர்ச்சி யூட்டும் பாடல்களை 15 மொழிகளிலும் தயாரித்து மாணவர்களுக்கு கற்றுக் கொடுத்து அதன் மூலம் தேசிய உணர்ச்சியூட்ட இந்திய அரசாங்கம் அறுவர் குழு ஒன்றினை நியமித்துள்ளது. இக்குழுவில M B சீனுவாசகன், அவர்களும் இடம் பெற்றுள்ளார் விரைவில் இக்குழு டேதயபூரில் நடக்கும் மாணவர் பயிற்சி முகாம் ஒன்றுக்கு செல்ல உள்ளது. வரும் சுதந்திர நாளில் டெல்லியில் 1500 மாணவர்கள் தேசிய கீதத்தை சேர்ந்து பாட பயிற்சிகள் அளிப்பர்.

## மலையாள இசைப்படம் 'கானம' கேரள அரசு விருது

கர்நாடக இசைக்கு ஏற்றம் கொடுத்து ஓர் அரிஜன இசைக் கலைஞன வாழ்க்கையை படமாக எடுத்துள்ளார் ஸ்ரீகுமரன் தம்பி என்ற மலையாள கவிஞர் இதில் இவரது பாடல்களும் தீக்ஷிகர் கீர்த்தனங்களையும் டாக்டர் பாலமுரளி கிருஷ்ண K J ஜேசுதாசு பாடியுள்ளனர். இசையமைப்பாளர் தட்சிணா மூர்த்தி படத்திற்கு நல்ல வரவேற்பு கிடைத்து ஒடுகின்றது. பாடல்களும் இனிமையாக உள்ளன. இப்படத்திற்கு மக்களைக் கவர்ந்த படமெனவும், இசைக் கலைக்கு பெருமை சேர்க்கும் படம் எனவும் கேரள அரசு 1982 ஆண்டு சிறப்பு பரிசு அளித்துள்ளது. திரைக்கலைஞர்களுக்கும், தயாரிப்பாளர்களுக்கும், கேரள அரசுக்கும் இயலிசை வாழ்த்துக்கள்!

## புதிய இசை அமைப்பாளர் மணிராஜா அறிமுகம்

திருப்பூர் L நாராயணன் தயாரிக்கும் புது தமிழ்ப் படம் 'கிராமத்து கிளிகள்' இதன் ஆரம்ப விழா சமீபத்தில் A V M ஒலிப்பதிவு கூடத்தில் பாடல் பதிவுடன் நடைபெற்றது. கவிஞர் வைரமுத்து பாடலுக்கு புதிய இசை அமைப்பாளர் மணிராஜா இசையமைத்தார். இப்படத்தின கதை வசனம் டைரக்ஷன் பொறுப்பினை சஞ்சீவி கணேஷ் ஏற்றுள்ளார்கள். நாராயணன் ஜிபினி ஆர்ட்ஸ் கம்பெனியின் முதல் தயாரிப்பு 'கிராமத்து கிளிகள்' ஆகும்.